# திருப்புகழமிர்தம்

கீலக

கார்த்திகை



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

உ

முருகா

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றன. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறு நேர இடமில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெருத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அந்தந்த ஆங்கில மாத முடிவுக்குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் வீதம் செலுத்தியே பெறலாம். குறிப்பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அநுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்கவில்லையென்று எழுதினுல் கவனிக்கப்படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெருத நிலையில் உள்ளவர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## அன்பர்களுக்கு

திருநெல்வேலியில் நமது வெளியீடுகளைப் பெற விரும்புவோர் பின்வரும் இடங்களில் நேரில் குறித்த காலத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

ஆங்கில மாதம் தமிழ் மாதம் 3, 4, 5 தேதிகள் ஆக ஆறு நாட்களில் காலை 9 முதல் 12 மணி வரை, மாலை 3 மணி முதல் 6 மணி வரை மட்டும்.

**திரு. வீ. சங்கரன் பிள்ளை,**
10, தெற்கு ரத வீதி, திருநெல்வேலி டவுன்.

**எல்லா நாட்களிலும் :**
66, சொக்கலிங்கம் சந்து, திருநெல்வேலி டவுன்.

## எமது வெளியீடுகள்

1. திருப்புகழ் முழுவதும் (புதிய பதிப்பு)
   விலை ரூ. 6-00 தபாற் செலவு ரூ. 1-50
2. திருப்புகழ்த்திரட்டு
   விலை ரூ 1-00 தபாற் செலவு ரூ. 0-90
3. பன்னிருதிருமுறைத்திரட்டு (புதிய பதிப்பு)
   விலை ரூ. 0-50. தபாற் செலவு ரூ. 0-80

புத்தகங்கள் பதிவு செய்யப்பட்ட (ரிஜிஸ்டர்டு) தபாலில்தான் அனுப்பி வைக்கப்படும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

உ

ஓம் குஹாய நம :





# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஹு—கார்த்திகை மீ நவம்பர் 1968 | இதழ் 8

## திருவண்ணுமலை

## திருப்புகழ்

மகர மெறிகடல் விழியினும் மொழியினு
மதுப முரல்குழல் வகையினு நகையினும்
வளமை யினுமுக நிலவினு மிலவினு நிறமூசும்
மதுர இதழினு மிடையினு நடையினு
மகளிர் முகுளித முலையினு நிலையினும்
வனச பரிபுர மலரினு முலரினு மவர்நாமம்

பகரு கினுமவர் பணிவிடை திரிகினு
முருகி நெறிமுறை தவறினு மவரொடு
பகடி யிடுகினு மமளியி லவர்தரு மநுராகப்
பரவை படியினும் வசமழி யினுமுத
லருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம வொருவச னமுமிரு சரணமு மறவேனே

ககன சுரபதி வழிபட எழுகிரி
கடக கிரியொடு மிதிபட வடகுல
கனக கனகுவ டடியொடு முறிபட முதுசூதங்

1372—1

கதறு சுழிகட லிடைகிழி படமிகு
கலக நிசிசரர் பொடிபட நடவிய
கலப மரகத துரகத ந்ருபகிரி மயில்வாழ்வே

தகன கரதல சிவசுத கணபதி
சகச சரவண பரிமள சததள
சயன வனசரர் கதிபெற முனிபெறு புனமானின்

தரள முகபட நெறிபட நிமிர்வன
தருண புளகித ம்ருகமத தனகிரி
தழுவ மயல்கொடு தனிமட லெழுதிய பெருமாளே.

### பதவுரை

ககன சுரபதி வழிபட=விண்ணுலகத்தில் வாழும் தேவர்களின் தலைவனுன இந்திரன் வழிபாடு புரிய, எழுகிரி=ஏழுகிரிகளானவை, கடக கிரியொடு மிதிபட=வட்டமான சக்கரவாளகிரியுடன் மிதிபடவும், வட குல கனக குவடு=வடக்கேயுள்ள சிறந்த பொன்மயமான பருத்த மேரு மலையானது, அடியொடு முறிபட = வேருடன் முறிந்து விழவும், முது சூதம்=பழமையான மாமரமானது, கதறு சுழி கடல் இடை கிழிபட=சுழித்து ஒலிக்கின்ற அலைகள் வீசும் கடலின் நடுவில் அறுபடவும், மிகு கலக நிசிசரர் பொடிபட=மிகுந்த கலகத்தைச் செய்துவந்த அசுரர்கள் பொடியாகவும், நடவிய=நடாத்திவந்த, மரகத கலப துரகதந்ருப=பச்சைநிறமுடைய தோகையுடன் கூடிய குதிரையாம் மயிலில் ஏறிவரும் அரசரே! கிரிமயில் வாழ்வே = இமயமலை மகளாம் மயில் போன்ற உமாதேவியின் செல்வக்குமாரரே! தகன கரதல சிவசுத=நெருப்பை யேந்திய திருக்கரத்தினராம் சிவபிரானுடைய புதல்வரே! கணபதி சகச=கணபதியின் சகோதரரே! சரவண=சரவணப் பொய்கையில் உதித்தவரே! பரிமள சததள சயன=நறுமணம் வீசும் நூற்றிதழ்த்தாமரையில் பள்ளி கொண்டவரே! வனசரர் கதிபெற=காட்டில் உலாவும் வேடர்கள் நல்ல கதியைப் பெற, முனிபெறு புனமானின்=சிவமுனிவர் பெற்ற தினைப்புனமானுகிய வள்ளி பிராட்டியின், தரள முகபட நெறிபட நிமிர்வன=முத்தாலாகிய மேலாடை வளைவுபடநிமிர்ந்து எழுவனவும், தருண=இளமை வாய்ந்தவையும், புளகித=பூரித்திருப்பவையும், ம்ருகமத தனகிரி=கஸ்தூரியணிந்துள்ளனவுமாகிய தனங்களாகிய மலைகளை, தழுவ மயல் கொடு=தழுவும் பொருட்டு காதல் மயக்கத்துடன், தனி மடல் எழுதிய=ஒப்பற்ற மடல் எழுதிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! மகரம் எறிகடல் விழியினும்= மகர மீன்களை வீசியெறியும் கடல்போன்ற கண்களிலும், மொழியி

னும்=பேச்சிலும், மதுப முரல் குழல் வகையினும்=வண்டுகள் ஒலிக்கும் கூந்தல் வகைகளிலும், நகையினும்=சிரிப்பிலும், வளமையினும் = வளப்பத்திலும், முகநிலவினும்=சந்திரனைப் போன்ற முகத்திலும், இலவினும் நிறம் மூசும் மதுர இதழினும்=இலவமலரினும் மிகுந்த சிவந்த நிறத்தை வீசும் இனிய வாயிதழிலும், இடையினும்=இடையிலும், நடையினும்=நடையிலும், மகளிர் முகுளித முலையினும்=மாதர்களின் அரும்பிய கொங்கைகளிலும்,நிலையினும்= அவர்கள் நிற்கின்ற நிலையிலும், வனச பரிபுர மலரினும்=சிலம்புகளணிந்த தாமரை மலர் போன்ற பாதங்களிலும், உலரினும்=அடியேன் வாட்டமடைந்தாலும், அவர்நாமம் பகருகினும்=அம்மாதர்களின் பேர்களைச் சொல்லிச் செபித்தாலும், பணிவிடை திரிகினும்= அவர் இடுகின்ற பணிவிடைகளைச் செய்து திரிந்தாலும், உருகி நெறி முறை தவறினும்=அவர்களிடம் உள்ளம் உருகி நீதி முறை தவறி நடந்தாலும், அவரொடு பகடி இடுகினும்=அம் மாதருடன் பரிகாச வார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தாலும்,அமளியில்=படுக்கையில், அவர் தரும் அநுராக பரவை படியினும்=அவர்கள் தரும் காமக் கடலில் முழுகினாலும், வசம் அழியினும்=என் வசம் அழிந்தாலும், முதல் அருணைநகர் மிசை=முதல் நாள் திருவண்ணாமலையில், கருணையொடு அருளிய=கருணையுடன் தேவரீர் வழங்கியருளிய, பரம ஒரு வசனமும்=மேலான ஒப்பற்ற உபதேச மொழியையும், இருசரணமும்=உமது இரண்டு திருவடிகளையும், மறவேனே=மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

விண்ணுலகில் வாழும் தேவர்களின் தலைவனாகிய இந்திரன் வழிபாடு செய்ய, வட்டமான சக்கரவாள கிரியுடன் ஏழு மலைகளும் மிதிபடவும், வடக்கேயுள்ள சிறந்த பொன் மயமான பெரிய மேருமலை அடியுடன் முறிந்து வீழவும், பழைய மாமரமானது சுழித்து ஒலியுடன் அலைவீசும் கடலில் அறுபடவும், மிகுந்த கலகத்தைச் செய்யும் அசுரர்கள் தூளாகவும் நடாத்திய தோகையுடன் கூடிய பச்சைக் குதிரையாம் மயிலின் மீது ஏறிவந்த அரசரே! இமய மலையின் செல்வியாம் உமாதேவியார் பெற்ற செல்வக் குமாரரே! நெருப்பை யேந்திய திருக்கரத்தினராம் சிவபெருமானுடைய புதல்வரே! கணபதிக்குச் சகோதரரே! சரவணபவரே! நறுமணம் வீசும் நூற்றிதழ்த் தாமரையில் பள்ளி கொண்டவரே! காட்டில் உலாவும் வேடர்கள் நல்ல கதி பெற சிவமுனிவர் ஈன்ற தினைப்புன மானாகிய வள்ளி பிராட்டியின் முத்துக்கள் பதித்த மேலாடை வளைவுபட நிமிர்ந்து எழுவனவும், இளமை வாய்ந்தனவும், புளகிதம் கொண்டனவும் கஸ்தூரி அணிந்துள்ளனவுமான கொங்கைகளான மலையைத் தழுவ மோகங் கொண்டு ஒப்பற்ற மடல் எழுதிய பெருமிதம்

உடையவரே! மகர மீன்களை வீசியெறியும் கடல் போன்ற கண்களிலும், பேச்சிலும், வண்டுகள் ஒலி செய்யும் கூந்தல் வகைகளிலும் சிரிப்பிலும், வளப்பத்திலும், சந்திரனை யொத்த முகத்திலும், இலவமலரினும் மிகுந்த சிவந்த நிறமுடைய இனிய வாயிதழிலும். இடையிலும், நடையிலும், மாதர்களின் அரும்பிய கொங்கைகளிலும், அவர்கள் நிற்கும் நிலையிலும், சிலம்பணிந்த தாமரை போன்ற பாதங்களிலும், அடியேன் வாடினாலும், அம்மாதர்களின் பேரைச் சொல்லிச் செபித்தாலும், அவர்கள் பணித்த ஏவல்களைச் செய்து திரிந்தாலும், அவர்கள்பால் உள்ளம் உருகினாலும், அதனால் நீதி நெறிகளிலிருந்து வழுவினாலும், அவர்களுடன் பரிகாச வார்த்தைகள் பேசினாலும், படுக்கையில் அவர்கள் தருகின்ற காம இன்பக் கடலில் முழுகினாலும், நினைவு அழிந்தாலும், தேவரீர் திருவண்ணாமலையில் சிறியேனுக்குக் கருணையுடன் உபதேசித்த ஒப்பற்ற சிறந்த உபதேச மொழியையும், உமது இரு திருவடிகளையும் மறக்க மாட்டேன்.

## விரிவுரை

**மகர மெறிகடல்:—**

மகரம் என்ற மீன் மிகவும் பெரியது. அது ஆனையை விழுங்கும் ஆற்றல் படைத்தது. இந்த மகரமீன் வாழ்வதனால் கடலுக்கு மகராலயம் என்ற பேர் ஏற்பட்டது பெண்களின் கண்கள் கடல் போல் பரந்து இருக்கும்.

கண்கள் ஆடவர்களாகிய மீன்களைப் பிடிக்கும் வலை போன்றது. கண் வீச்சினால் காமுகர் மதி கலங்கிக் கதி கலங்குவர்.

**மொழியினும்:—**

இனிய மொழிகளினால் ஆடவர் மயங்கித் தியங்குவர்.

**மதுப முரல் குழல் வகையினும்:—**

மதுபம்-தேன் வண்டு. கூந்தலில் மலர் முடித்திருப்பதனால் வண்டுகள் ரீங்காரஞ் செய்கின்றன.

கூந்தலைப் பின்னியும், முடிந்தும் தொங்கவிட்டும் பல வகையிலலங்கரித்துக் கொள்ளுவர். அதனால் குழல்வகை என்றார்.

**நகையினும்:—**

புன் முறுவலால் இளைஞர்களை மயக்குவர்.

**உலரினும்:—**

இப்படி மாதரது பல அங்கங்களில் மயங்கி வாடுவர். உலர்தல்—வாடுதல்.

"உலர்ந்து போனேன் உடையானே"—*(கலந்து)* திருவாசகம்.

முதல் அருணைநகர்மிசை கருணையொடருளிய பரம வொருவசனமு மிரு சரணமு மறவேனே:—

இந்தப் பகுதி அருணகிரியாரது வரலாற்றைக் குறிப்பது.

அருணகிரிப் பெருமானுக்கு முருகன் குருவாகத் தோன்றி சிறந்த உபதேசம் புரிந்தருளினார்.

"உபதேசித்த உபதேசமொழியை ஒருபோதும் மறவேன்" என்கின்றார். மறக்கச் செய்வது மாதர் மயல்.

அடியேன் மாதர் மயலால் வாடினாலும், அம்மாதருடைய பேரையே உருப்போட்டாலும், அவர் இட்ட பணிகளைப் புரிந்து திரிந்தாலும், அவருடன் விளையாட்டு வசனங்களை உரையாடினாலும், படுக்கையில் அம்மாதர்கள் தருங் காம இன்பக் கடலில் முழுகினாலும், அப்பனே, உன் உபதேச மொழிகளையும் திருவடிகளையும் மறவேன்" என்கின்றார்.

ஆனால் உபதேசம் கேட்டபின் மாதர் மயலில் மயங்கினார் என்று கருதக் கூடாது. எல்லோரும் மயங்குவர். அப்படி அடியேன் மயங்கினாலும் உன் உபதேசத்தையும் திருவடியையும் மறவேன் என்று தனக்குள்ள உறுதிப்பாட்டை உரைக்கின்றார்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண்டயர்கினும் வேல் மறவேன்"—*கந்தரலங்காரம்.*

ககன சுரபதி வழிபட :

தேவேந்திரன் சூரசங்காரத்தை வேண்டிப் பல காலந்தவஞ் செய்தான். அவன் தவங் காரணமாகத்தான் முருகவேள் திருவுருவந் தாங்கி வந்து சூரனை வதைத்தருளினார்.

"தருவினாட்டரசாள்வான் வேணுவின்
உருவமாய்ப் பல நாளே தானுறு
தவசினால் சிவன் நீ போய் வானவர் சிறைதீர"
—*(நிருதரார்)* திருப்புகழ்.

எழுகிரி :—

சூரபன்மன் போரிட்டபோது அவனுக்குத்துணையாக அசுரர்கள் ஏழுகிரிகளாக நின்றார்கள். அவற்றை முருகவேள் பொடி படுத்தினார்.

முதுகூதம் கதறு சுழி கடலிடை கிழிபட:—

சூரபன்மன் முடிவில் கடலிடை பெரிய எஃகு மாமரமாய் நின்று கிளைகளை அசைத்து உலகங்களைத் துன்புறுத்தினன். வேலாயுதம் அந்த பழைய மாமரத்தைப் பிளந்தது.

"சூர்மா மடியத் தொடு வேலவனே" —கந்தரநுபூதி

பரிமள சததளசயன:—

சரவணப் பொய்கையில் தோன்றிய முருகப் பெருமானை கார்த்திகை மாதர்கள் தாமரை மலரில் வளர்த்திக் கண் துயிலச் செய்து களித்தார்கள்.

மடலெழுதிய:—

ஒரு பெண்மணியை விரும்பிய காதலன் அவள் தனக்குக் கிடைக்கா தொழியின், அவள் உருவத்தை ஒரு துணியில் எழுதி கையில் பிடித்துக்கொண்டு, பனைமடலால் ஆய குதிரை மீது ஏறி வருவன்.

இந்த்ர கோபமு மரகத வடிவமும்
இந்த்ர சாபமும் இருகுழையொடு பொரு
இந்த்ர நீலமு மடலிடை யெழுதிய பெருமாளே.
—(கொந்துவார்) திருப்புகழ்.

இதன் விரிவை ஐந்தாம்படை வீட்டுத் திருப்புகழ் விரிவுரை நூலில் 165ஆம் பக்கத்தில் காண்க.

## கருத்துரை

"முருகா! காமஇன்பக் கடலில் மூழ்கினாலும் உனது ஒரு மொழியையும் இரு சரணங்களையும் மறவேன்.

## திருப்புகழ்

முகிலை யிகல்பொரு முழுவிருள் குழலென
முதிய மதியது முகமென நுதலிணை
முரணர் வரிசிலை முடுகிடு கணைவிழி யெனமூவா

முளரி தனின்முகு ளிதமலர் முலையென
முறுவல் தனையிரு குழைதனை மொழிதனை
மொழிய வரியதொர் தெரிவையர் வினையென
மொழிகூறிப்

பகலு மிரவினு மிகமன மருள்கொடு
பதியி லவர்வடி வுளதழ கெனவொரு
பழுது மறஅவர் பரிவுற இதமது பகராதே

பகைகொ டெதிர்பொரு மசுரர்கள் துகைபட
விகட முடனடை பயில்மயில் மிசைவரு
பவனி தனையநு தினநினை யெனஅருள் பகர்வாயே

புகல வரியது பொருளிது எனவொரு
புதுமை யிடஅரி யதுமுத லெனுமொரு
பொதுவை யிதுவென தவமுடை முனிவர்கள்
புடைசூழப்

புரமு மெரியெழ நகையது புரிபவர்
புனலும் வளர்மதி புனைசடை யினரவர்
புடவி வழிபட புதைபொருள் விரகொடு
புகல்வோனே

அகில கலைகளு மறநெறி முறைமையு
மகில மொழிதரு புலவரு முலகினி
லறிஞர் தவமுயல் பவர்களு மியலிசை யதனுலே

அறுவர் முலையுணு மறுமுக னிவனென
அரிய நடமிடு மடியவ ரடிதொழ
அருணை நகர்தனி லழகுடன் மருவிய பெருமாளே.

## பதவுரை

புகல அரியது பொருள் இது என = இத்தன்மையது என்று எடுத்துச் சொல்லுதற்கு அரியதான பொருள் இதுதான் என்றும், ஒரு புதுமை இட அரியது முதல் எனும் = ஒரு புதுமையாம் தன்மையில் கற்பனை செய்ய அரியதான முதன்மையது என்றும், ஒரு பொதுவை இது என = ஒப்பற்ற பொதுவாம் தன்மை கொண்டது இது என்றும் கூறும்படி, தவமுநிவர்கள் புடைசூழ = தவநிலையில் உள்ள முநிவர்கள் பக்கத்தில் சூழ்ந்து நிற்க, புரமும் எரி = முப்புரங்கள் எரியால் அழியும்படி, நகை அது புரிபவர் = புன்னகை புரிந்தவரும், புனலும் = கங்கா நதியும், வளர்மதி சடையினர் அவர் = வளரும் பிறை மதியையும் அணிந்துள்ள சடை முடியையுடையவரும் ஆகிய சிவபெருமான்,

புடவி வழிபட=பூதலத்தில் தேவரீரை வழிபாடு செய்ய, புதை பொருள்=இரகசியப் பொருளை, விரகொடு புகல்வோனே= சாமர்த்தியத்துடன் உபதேசித்தவரே ! அகில கலைகளும்=எல்லாக் கலைகளும், அறநெறி முறைமையும்=தருமநெறியைக் கூறும் ஒழுக்க நூல்களும், அகில மொழிதரு புலவரும்=எல்லாவற்றையும் எடுத்துச் சொல்ல வல்ல புலவர்களும், உலகினில் அறிஞர்=உலகில் உள்ள அறிஞர்களும், தவம் முயல்பவர்களும்=தவநிலையைச் சார்ந்து முயல் பவர்களும், இயல் இசை அதனாலே=இயற்றமிழாலும் இசைத்தமி ழாலும், அறுவர் முலை உணும் அறுமுகன் இவன் என=கார்த்தி கைப் பெண்களாகிய அறுவர்களின் முலைப்பால் உண்ணும் ஆறு முகப் பெருமான் இவன் என்று தியானித்துப் புகழ்ந்து கூறி, அரிய நடம் இடும் அடியவர்=அருமையான ஆனந்தக் கூத்தாடும் அடிய வர்களாய், அடிதொழ=உமது திருவடிகளைத் தொழுது நிற்க, அருணை நகர்தனில்=திருவண்ணாமலையில், அழகுடன் மருவிய=அழ காக வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே ! முகிலை இகல் பொரு முழு இருள் குழல் என=மேகத்துடன் மாறுபட்டுப் போர் புரியும் முற்றிய இருள் போன்ற கூந்தல் என்றும், முதிய மதி அது முகம் என=பூரண சந்திரனே முகம் என்றும், நுதல் இணை= புருவங்கள் இரண்டும், முரணர் வரிசிலை=பகைவரின் கட்டப்பட்ட வில் என்றும், விழி முடுகிடு கணை என=கண் விரைந்து பாயும் அம்பு போன்றது என்றும், மூவா முளரிதனில் முகுளித மலர் முலை என=மூப்பில்லாத தாமரையின் அரும்பாக உள்ள மலர் போன்றது கொங்கை யென்றும், முறுவல் தனை=பற்களையும், இரு குழைதனை= இரு குழைகளையும், மொழிதனை=மொழியையும், மொழிய அரியது ஓர் தெரிவையர் வினை எனமொழி கூறி=உவமை சொல்லுதற்கு அரியவாம் மாதர்களின் கருவிகளாம் என்றும் கூறி, பகலும் இரவும் மிக மன மருள் கொடு=பகலும்இரவும் மிக்க மன மயக்கங்கொண்டு, பதியில் அவர் வடிவு உளது அழகு என=கணவனில்லாதபொது மாதர்களிடம் அழகு இருப்பிடங் கொண்டுள்ளது என்று நினைந்து, ஒரு பழுதும் அற=சிறிதும் குறைவில்லாமல், அவர் பரிவு உற=அம் மாதர் என்பால் அன்பு கொள்ளும்படி, இதம் அது பகராதே=இத மொழிகளை அவரிடம் சொல்லித் திரியாதே, பகைகொடு எதிர் பொரும்=பகைமை கொண்டு எதிர்த்தும் போர்புரிந்த, அசுரர்கள் துகைபட=அசுரர்கள் தூளாகுமாறு, விகடமுடன்=விநோதமாக, நடைபயில் மயில் மிசை வரும்=நடனமிடுகின்ற மயிலின்மீது வரும், பவனிதனை=திருவுலாக் காட்சியை, அநுதினம்=நாள்தோறும், நினை என அருள் பகர்வாயே=நீ நினைப்பாயாக என்று அருள்மொழி கூறி யருள்வீராக.

## பொழிப்புரை

இத்தன்மைத்து என்று எடுத்துச் சொல்லுதற்கு அரிய தான பொருள் இதுதான் என்றும், ஒரு புதிதாம் தன்மையில் கற்பனை செய்து பார்க்கவும் அரியதான முதன்மையது என்றும் ஒப்பற்ற பொதுவாம் தன்மை கொண்டது இது என்றும் கூறும் தவநிலையில் உள்ள தவமுனிவர்கள் அருகில் சூழ்ந்து நிற்கவும், திரிபுரம் எரியுமாறு புன்னகை புரிந்தவரும், கங்கையையும் வளர் பிறையையும் அணிந்த சடை முடியினருமாகிய சிவ பெருமான் பூதலத்தில் வந்து உம்மை வழிபாடு செய்ய இரகசியப் பொருளை சாமர்த்தியத்துடன் உபதேசித்தவரே! சகல கலைகளும், அறநெறியைக் கூறும் ஒழுக்க நூல்களும், எல்லாவற்றையும் கூற வல்ல புலவர்களும், உலகில் உள்ள அறிஞர்களும், தவநிலையை முயல்பவர்களும் இயற்றமிழிலும் இசைத் தமிழிலும், கார்த்திகை மாதர் அறுவரது முலைப்பால் உண்ணும் ஆறுமுகப் பெருமான் இவன் என்று தியானித்துக் கூறி, ஆனந்த மேலிட்டால் அருமையான நடனம்புரிபவர்களாய் உமது திருவடிகளைத் தொழுது நிற்கத் திருவண்ணுமலையில் அழகாக எழுந்தருளியிருக்கும் பெருமிதமுடையவரே! மேகத்துடன் மாறு பட்டுப் போர்புரிய வல்ல முற்றிய இருளே கூந்தல் என்றும், பூரண சந்திரனே முகம் என்றும், இரு புருவங்கள் பகைவர்கள் வரிந்து கட்டிய வில் என்றும், விரைந்து பாயும் அம்பு கண் என்றும், இளமையான தாமரையின் மொட்டு கொங்கை யென்றும், பற்களையும், இரு குழைகளையும், மொழியையும் உவமை சொல்லுதற்கு அரியவாம் மாதர்களின் செயலாற்றுங் கருவிகள் என்றும் கூறி, பகலும் இரவும் பதியிலாத பொது மாதர்களின் வடிவில் அழகு இருப்பிடங்கொண்டு இருக்கின்ற தென்று நினைத்து, சிறிதும் குறைவு வராமல் அம்மாதர்கள் என் மீது அன்பு கொள்ளுமாறு இதமான சொற்களைச் சொல்லித் திரியாதே, பகைத்து எதிர்த்த அசுரர்கள் பொடியாகுமாறு, விநோதமாக நடனஞ் செய்யும் மயிலின் மீது ஏறி வரும் திருவுலாக் காட்சியை நாள்தோறும் நீ மறவாது நினைப்பாயாக என்று எனக்கு அருள் புரிவீராக.

## விரிவுரை

**முகிலை யிகல் பொரு முழுவிருள் குழலெனா:—**

கரிய நிறமுடையது மேகம். கரிய பெரிய இருள் அம்மேகத்துடன் மாறுபட்டுப் போர் புரிகின்றதாம். அத்துணைக் கருமையுடையது இருள் அந்த முழு இருள் போன்றது கூந்தல்.

**முதிய மதியது முகமெனா:—**

பெண்கள் முகமானது முழுநிலாவைப் போன்ற அழகும் குளிர்ச்சியும் உடையது.

**நுதலிணை முரணர் வரிசிலை:—**

நுதல்—புருவம். இணை—இரண்டு. முரணர்—பகைவர். வரிசிலை—கட்டப்பட்ட வில்.

பெண்கள் புருவம் பகைவர் வரிந்து கட்டிய வில்லைப் போன்றது. வளைந்திருப்பது.

**முடுகிடு கணைவிழி:—**

வேகமாகப் பாயவல்ல கணைபோன்றது கண்கள். காமுகர் உள்ளத்தைப் பிளக்கவல்லது.

**மூவா முளரிதனின் முகுளிதமலர் முலை:—**

மூவா—மூப்பில்லாத இளமையான தாமரை மலரின் அரும்பு போன்றது பெண்களின் தனம்.

**பதியிலவர்:—**

பொதுமாதர்கள் கணவனில்லாதவர்கள்; அதனுல் பதியிலார் எனப்பட்டனர்.

**இதமது பகராதே:—**

மேலே கூறிய பொதுமாதர்களிடம் இதமொழிகளைக் கூறி அவமே திரிவது கூடாது.

**விகடமுடனடை பயில் மயில் மிசைவரு பவனிதனை:—**

விநோதமாக நடனம் புரிகின்ற மயிலின் மீது உலா வருகின்ற முருகவேளின் திருவுலாக் காட்சியை எப்போதும் தியானிக்க வேண்டும்.

அவ்வாறு தியானித்தால் காம மயக்கம் விலகும். மயில் நஞ்சுடைய பாம்பை அடக்கவல்லது. மயில் உலாக் காட்சியால் ஆசை மயக்கமான நஞ்சு அடங்கும்.

**அநுதினம் நினையென அருள் பகர்வாயே:—**

'நாம் மயிலின்மீது வரும் திருவுலாக் காட்சியை நீ தினந் தோறும் கருதுவாய், என எனக்கு உபதேசித்தருள்வாய்" என்று அருணகிரியார் முருகனிடம் வரம் கேட்கின்ருர்.

**புகலவரியது பொருளிது என:—**

முனிவர்கள் புரியும் தவநிலை இத்தன்மைத்து என்று எடுத்துச் சொல்ல இயலாதது. இதுதான் மெய்ப்பொருள் என்று கூறத்தக்கது அத்தவம்.

**ஒரு புதுமையிட அரியது முதலெனும்:—**

ஒரு புதிதாம் தன்மையால் கற்பனை செய்து பார்க்க முடியாத முதன்மையுடையது அத்தவ நிலை.

**ஒரு பொதுவையிது வென:—**

ஒப்பற்ற பொதுவாம் தன்மை கொண்டது அத் தவநிலை.

மனம் அடங்கி கருவிகரணங்கள் நீங்கி சமாதி நிலையில் நிற்கும் தவம் எல்லாச் சமயங்கட்கும் பொதுவானது ஆகும்.

**தவமுநிவர்கள் புடை சூழ:—**

சிவபெருமான் திரிபுரத்தை எரித்தபோது மேலே கூறிய சிறந்த தவமுநிவர்கள் பக்கத்தில் சூழ்ந்து நின்றார்கள்.

**புடவி வழிபட:—**

சிவபெருமான் இப்பூதலத்தில் சுவாமி மலையில் வந்து முருகனை வழிபட்டு முருகனிடம் உபதேசம் பெற்றார் என்பது வரலாறு.

திருத்தணியிலும் வந்து முருகனை வழிபட்டு உபதேசம் பெற்றார் என்று தணிகைப் புராணம் புகல்கின்றது.

**அகில கலைகளும் :—**

கலைகள் பல. கலைகள் அறுபத்து நான்கு என்றும் கூறுவர் இவ்வாறு கூறப்படும் எல்லாக் கலைகளும் முருகனைத் துதி செய்கின்றன.

**அறநெறி முறைமையும் :—**

அறநெறியை வற்புறுத்திக் கூறும் ஒழுக்க நூல்களும் முருகனை வழுத்துகின்றன.

**அகில மொழிதரு புலவரும் :—**

எல்லாவற்றையும் இனிது தெளிவாக எடுத்துக் கூறவல்ல புலவர்கள் யாவரும் முருகனைப் புகழ்ந்து துதி செய்கின்றார்கள்.

**உலகினில் அறிஞர்:—**

உலகில் சிறப்பாக வாழும் அறிஞர்கள் யாவரும் முருகனைப் புகழ்ந்து போற்றுகின்றார்கள். அறிஞர்களின் தியானப் பொருள் முருகர்.

"அறிஞராயோர் சிந்திக்குந் தனது தொல்லைத்
திருமுகம் ஆறும் கொண்டான்" —கந்தபுராணம்.

தவமுயல்பவர்:—

சிறந்த தவநிலையை முயல்கின்ற முனீந்திரர்களும் முருகனைப் புகழ்ந்து பாடுகின்றார்கள்.

இயலிசை யதனாலே :—

இயல் தமிழாலும், இசைத் தமிழாலும் முருகனைப் பரவுகின்றார்கள்.

அறுவர் முலையுணும் அறுமுகனிவனென:—

சரவணப் பொய்கையில் முருகன் கார்த்திகை மாதர்கள் அறுவரின் முலைப்பால் உண்டு திருவிளையாடல் புரிந்தருளினார். அக்கருணைத் திறத்தை நினைந்து, 'அறுவர் முலையுண்ட ஆறுமுகத் தெய்வமே" என்று புகழ்ந்து போற்றுகின்றார்கள்.

"அறுவர் முலைநுகரும் அறுமுக குமர
சரணமென அருள்பாடி" —சீர்பாதவகுப்பு.

அரியநடமிடு மடியவர் அடிதொழ:—

அடியவர்கள் முருகனைப்பாடி ஆனந்த மிகுதியால் கூத்தாடி அப்பெருமானது திருவடிகளைத் தொழுகின்றார்கள். இத்தகைய அடியார்கள் வாழும் தலம் திருவண்ணாமலை.

## கருத்துரை

அருணை மேவும் ஆறுமுகப் பெருமாளே! உன் மயில் உலாக் காட்சியை நினையென எனக்கு அருள் செய்.

உ

முருகா

# கற்பு

## பூங்கொடி

இருட்படலங்களைக் கிழித்துக் கொண்டு செக்கச் செவேலென்று, கிழ்த்திசையில் கதிரவன் உதித்துக் கொண்டிருந்தான். சலசல என்று ஆற்றுநீர் ஓடிக் கொண்டிருந்தது. இரு புறங்களிலும் மரங்கள் குளு குளு என்று நிழல் தந்து கொண்டு சிப்பாய்களைப் போல் நின்று கொண்டிருந்தன. நாணலும் தருப்பையும் ஆற்றங்கரையில் கற்புடைய காரிகையரைப் போல் தலை கவிழ்ந்து கொண்டிருந்தன. சிவ ஞானிகள் உள்ளம் போல் நதிநீர் தெளிவாக இருந்தது. குழந்தைகள் உள்ளம் போல் மாசில்லாத வெண்மணல்கள் கரையில் காட்சியளித்தன.

ஆற்று நீரில் உலர்ந்த ஒரு இலையில் எறும்பு ஒன்று மிதந்து சென்றது. அது மரணத்துக்கு அஞ்சி அந்த இலையில் இப்படியும் அப்படியுமாகத் தவித்தது. இதை ஒரு கருடன் கவனித்தது. அது கருணையுடன் பறந்து வந்து, மெல்ல அந்த இலையுடன் எறும்பை யெடுத்துக் கரையில் சேர்த்தது. எறும்புக்கு வந்த இடர் நீங்கியது. அதன் உள்ளத்தில் உவகை பூத்தது.

அங்கு ஒரு மூடனான வேடன் கருடனைக் குறிவைத்து அம்பு எய்ய முயன்று கொண்டிருந்தான். இதைப் பார்த்த எறும்பு அவன் காலில் நறுக்கென்று கடித்தது. அதனால் கணை குறிதவறியது. பாணம் கருடனுக்கு அருகில் சென்றது. கருடன் தான் செய்த நன்றிக்கு எறும்பு பிரதி நன்றி செய்ததையறிந்து பறந்து போயிற்று. பிறருக்கு நாம் உதவியதால் நமக்கும் உதவி கிடைத்தது என்று அது எண்ணி அக மகிழ்ந்தது.

அந்த நதியில் அதிகாலையில் வேதவித்துக்களான அந்தணர்கள் நீராடி, நீறுடி ஆதித்தனுக்கு அர்க்கியம் கொடுத்து காயத்திரி மந்திரம் செபித்துக் கொண்டிருந்தார்கள். ஆற்றங்கரையில் சில பிச்சைக்காரர்கள் அமர்ந்து புலிக்கோடு ஆடிக் கொண்டிருந்தார்கள். மற்றொருபுறம் பெண்கள் குளித்துவிட்டு ஈரப்புடவையுடன் பளபள என்று விளக்கிய செப்புக்குடங்களில் நீரை முகந்து இடுப்பில் வைத்துக் கொண்டு அன்னம்போல் நடந்து கொண்டிருந்தார்கள்.

பூங்கொடி வழக்கமாக வருவதுபோல் அன்றும் வந்து ஒரு புறத்தில் நீராடிவிட்டு, ஈரப்புடவையுடன் வெள்ளிச் சொம்பில் தண்ணீர் எடுத்து, ஆற்றங் கரையில் அரசடி விநாயகப் பெருமான் திருமுடி மீது நீரை வார்த்து, அருகில் உள்ள அறுகம் புல்லைப் பறித்து இட்டு வலம் வந்து கொண்டிருந்தாள்.

அந்த நகரை யாளும் அரசனுடைய அமைச்சன் திவாகரன் அங்கு வந்து உலாவிக்கொண்டிருந்தான். அவன் பார்வை பூங்கொடி மீது விழ்ந்தது. மெல்லிய ஈரஆடையில் அவள் திருமேனி மெருகிட்ட தங்கப்பதுமைபோல் ஒளிவிட்டது. அவள் வடிவழகில் அப்படியே அவன் மதி மயங்கினான். "ஆ! ஆ! இவள் என்ன அரம்பையா! சாக்ஷாத் கங்காதேவியே மானுடப் பெண்ணாக வந்தாளோ! இப்படிப்பட்ட ஒரு அழகின் சிகரத்தை நான் இதுவரை கண்டதில்லையே? அன்ன நடையும், மின்னலிடையும், மான்விழியும் தேன்மொழியும் உடைய இவள் யார்?" என்று எண்ணி இமைகொட்டாது பார்த்துக் கொண்டு நின்றான்.

பூங்கொடி விநாயகரை வணங்கிவிட்டுத் தலை குனிந்த வண்ணமாகப் புறப்பட்டுச் சென்றாள். மந்திரி தன்வசம் அழிந்து நிலை குலைந்து நின்றான். மறு நாளும் மந்திரி அதே நேரத்தில் அங்கு வந்து நின்றான். அன்றும் பூங்கொடி வழக்கம் போல் விநாயகரை வழிபட்டுக் கொண்டிருந்தாள். மந்திரி அவள் வடிவழகில் தன்னைப்பறி கொடுத்தான். இவ்வாறு நான்கைந்து நாட்கள் மந்திரி அங்கே வந்து நின்று கண்களால் பாவமூட்டையைக் கட்டிக் கொண்டான்.

அன்று வெள்ளிக்கிழமை. அதிகாலையில் எழுந்து பூங்கொடி ஆற்றுக்குச் சென்று நீராடி நீர் முகந்து விநாயகரைப் பூசித்து வலம் வந்து கொண்டிருந்தாள். வாழைப்பழத் தோலை மிதித்து வழுக்கிக் கீழே விழுந்தாள். சிறிது தொலையில் வழக்கம் போல் அவள் மீது வைத்த கண்ணை வாங்காது பார்த்துக் கொண்டிருந்த அப் பாதகன் ஓடி வந்து அவளைப் பிடித்துத் தூக்கினான். அப்போது அவன் அடைந்த இன்பத்துக்கு எல்லையேது. தன்னைப் பரம பாக்கியசாலியாக நினைத்துக் கொண்டான்.

பூங்கொடி தன்னை அன்னியன் தொட்டுத் தூக்கியதை நினைத்து மிகவும் வருந்தினாள். ஆபத்துக்குப் பாதகம் இல்லையென்று எண்ணி ஆறுதல் அடைந்தாள்.

"அண்ணா! மிகவும் நன்றி" என்று இனிய தழுதழுத்த குரலுடன் கூறினாள்.

அவன் நானல்லவா தங்கட்கு நன்றி கூறவேண்டும். என்ன நான் அப்படி உதவி செய்து விட்டேன். கடமையைத்தானே செய்தேன். நான் இந்த நகரத்து அமைச்சன்.

தங்கட்கு எத்தன்மைய உதவிகள் வேண்டுமானாலும் என்றும் செய்ய நான் காத்துக்கொண்டிருக்கின்றேன்" என்றான்.

"அண்ணா! தங்கள் அன்புக்கும் பண்புக்கும் நன்றி"என்று கூறி விட்டு அவள் வெள்ளிச் சொம்பில் தண்ணீரை முகந்து கொண்டு வேகமாக வீட்டை நாடிச் சென்றாள்.

மந்திரி அந்த வாழைப்பழத் தோலுக்கு நன்றி செலுத்தினான். ஆ! வாழைப் பழத் தோலே! உன்னால் இந்தக் கட்டழகியைத் தீண்

டும் பெரும் பேறு கிட்டியது. நீ செய்த உதவியை ஒருபோதும் மற வேன்'' என்ருன்.

அவள் இருக்குமிடத்தையும் அவள் யார்என்பதையும் விசாரித்து அறிந்தான் அக் கயவன். அவள் அரசாங்க அலுவலகத்தில் பணி புரியும் பணியாளன் மனைவி யென்பதை யறிந்தான். அவன் மனஇ எளிதில் அவளை அடையலாம் என்று பகற் கனவு கண்டது.

மறுநாள் ஆற்றங்கரையில் அவளைச் சந்தித்து, ஒரு சிறு தந்தப் பெட்டியை மெல்ல அவள் கையில் கொடுத்து இது உங்கள் பூஜைக்கு ஆகட்டும். வைத்துக் கொள்ளுங்கள்'' என்ருன். அவள் சிறிது அச் சத்துடன் பெற்றுக் கொண்டாள்.

வீட்டில் வந்து அப்பெட்டியைப் பார்த்தாள். அதில் ஒரு காகித உறை இருந்தது. அதை உடைத்துப் பார்த்தாள். அதில் கரன்ஸி நோட்டுக்களும், ஒரு கடிதமும் இருந்தன.

''என் அன்புச் செல்வமே ! உனக்கு என் வணக்கமும் வாழ்த்தும். நான் இந்நகரத்து அமைச்சன். நான் நினைத் தால் எதையும் செய்யும் ஆற்றல் படைத்தவன். உன் அதிர்ஷ்ட வசத்தால் உன்மீது எனக்கு எல்லையில்லாத காதல் ஏற்பட்டது. என்னை நீ ஏற்பதனுல் உன் வாழ்வு சிறக்கும். உன் கணவனுக்கும் வேலை உயர்வு கிடைக்கும். ஆதலால் உன்னை நினைந்து நினைந்து ஏங்கும் என்னை விரும்பி ஏற்றுக் கொள். நீ குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட இடத் தில் சந்திக்கலாம்.

உன் அன்பை விரும்பும்

திவாகரன்
அமைச்சன்.

இதைப் படித்து அவள் திடுக்கிட்டாள். அதிகார பலம் படைத்த அவன் என்ன செய்வானே? நம் கணவனுரை உத்யோக சம்பந்தமாக அயலூருக்குப் போகுமாறு செய்தது இவன்தான் போலும். நாம் ஏதாவது மாருக நடந்தால் நம் கணவனுரை அயலூரில் கொன்ரு லுங் கொல்லுவான். எதையும் செய்யும் ஆற்றல் படைத்தவன் என்று எழுதியுள்ளானே. தெய்வமே ! என்னையும் என் கணவனை யும் நீதான் காப்பாற்ற வேண்டும். என்று வேண்டிக் கொண் டாள்.

நெடிது சிந்தனை செய்தாள். ஒரு முடிவுக்கு வந்தாள்.

மறு நாள் ஆற்றங்கரையில் அவன் வழக்கம்போல் நின்று கொண்டிருந்தான். இவள் அவனைக் கடைக்கண்ணுல் பார்த்து ஒரு புன்னகை புரிந்தாள். அவன் அப்படியே கிறுகிறுத்துப் போனுன்.

ஒரு கடிதத்தை மற்றவர்கள் காணுவண்ணம் நீட்டிவிட்டுத் திரும்பி விட்டாள்.

திவாகரன் அதனைப் பிரித்தான். படித்தான்.

அன்புள்ள அமைச்சர் பெருமானே !

பல வணக்கம். நலம்.

தாங்கள் என்னை விரும்புவதற்கு நான் எத்தனை தவஞ் செய்தேனே ? என் வாழ்வு இன்றே உயர்ந்துவிட்டது. தாங்கள் தங்கம். நான் பித்தளைத்துண்டு. பித்தளைத் துண்டைத் தங்கக்கட்டி விரும்புமானுல் அது பித்தளைத் துண்டு செய்த புண்ணியந்தானே ? எனக்குத் தங்களைப் பிடித்திருக்கின்றது. தாங்கள் வருவது யாருக்குந் தெரியக் கூடாது. இன்று இரவு 10 மணிக்கு வாருங்கள். தங்கள் வரவைக் கதிர்பார்த்திருக்குங் கமலம் போல் எதிர்பார்த் திருப்பேன்.

இங்ஙனம்
அன்பு
**பூங்கொடி**

இக் கடிதத்தை அவன் பலமுறை படித்தான். அவன்உடம் பில் மின்னல் பாய்ந்தது போல் இன்பக் கிளர்ச்சி யேற்பட்டது. அக் கடிதத்துக்குப் பலமுறை முத்தங் கொடுத்தான். நேரே தன் மாளிகைக்குச் சென்றுன்.

அன்று பகல் முழுவதும் அவனுக்கு ஒரு வேலையும் ஓடவில்லை. வெறும் உடம்பு மட்டும் தொழில் செய்தது. உள்ளம் உணர்வு எல் லாம் பூங்கொடியிடம் உலாவின.

அன்று இரவு ஒன்பதுமணி. பூங்கொடி சிறிது உணவுவுண்டாள். அவள் மனம் படபட என்று அடித்துக் கொண்டது. வேலும் மயி லுந்துணை என்று பலமுறை கூறிஞள். தனியே இருக்கும் அவளுக்கு வேலும் மயிலுமன்றி வேறு துணையில்லை.

சரியாக மணி 10. ஆடை அணிகளால் அலங்கரித்துக்கொண்ட திவாகரன் பழப் பையுடன் அவள் வீட்டில் நுழைந்தான். அவன் ஆடையில் அணிந்துள்ள வாசனை கமகம என்று வீசியது. பூங்கொடி யின் உள்ளம் கூசியது.

வாருங்கள் வாருங்கள். மிகுந்த மகிழ்ச்சி. இன்றே என் வாழ்வு ஈடேறியது. தாங்கள் இங்கு வர இச்சிறு வீடு என்ன மாதவஞ் செய்ததோ ?'' என்று தேன்போல இனிக்கச் சொன்னுள்.

படுக்கை யறைக்கு அழைத்துச் சென்றுள். அவனைப் படுக்கை யில் இருக்கச் செய்தாள். திவாகரன் சுவர்க்கத்தில் இருப்பதாக எண்ணி ஆனந்த பரவசனுகி அதில் அமர்ந்தான்.

''என் அன்பே ! பால் காய்ச்சி வைத்திருக்கின்றேன். இதோ கொண்டு வருகின்றேன்'' என்று கூறிவிட்டு வெளியே வந்து, பளிச் சென்று கதவைச் சாத்தி, தான் முன்னமே தயார் செய்து வைத்திருந்த உயர்ந்த பூட்டையெடுத்து வெளியே பூட்டி விட்டாள். உடனே தெருக் கதவையும் பூட்டிவிட்டு அந்தவூரில் உள்ள தன் உறவினர் வீட்டில் போய்த் தங்கினுள்.

மந்திரி இஞ்சி தின்ற வானரம் போல் அடைபட்டுக் கிடந்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ''இவள் நம்மை ஏமாற்றிவிட்டாள். நாம் பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டோம். எப்படி வெளியேறுவது'' என்று பலப்பல சிந்தித்தான். கதவைக் காலால் உதைத்தான். கால்தான் வலித்தது. இரவெல்லாம் உறக்கமின்றி கைதி போல் அத்தனியறையில் கிடந்தான்.

மறுநாள் பூங்கொடி வழிபாடு செய்துவிட்டு நேரே அரண்மனைக்குச் சென்ருள். உத்தரவு பெற்று அரசனைச் சந்தித்தாள். அரசன் அடிமலர் மீது வீழ்ந்து அழுதாள் தொழுதாள்.

''அம்மா ! தாங்கள் யார் ? உங்களுக்கு என்ன குறை ? சீக்கிரம் சொல்லுங்கள். உடனே உம் கவலையைத் தீர்க்கின்றேன்''

கருணை நிறைந்த காவலர் பெருமாளே ! தஞ்சம் அடைந்த அற்ப புருவுக்காகத் தன் உடலைச் சேதித்துத் துலையில் ஏறிய சிபிச் சக்ரவர்த்தி போன்றவர் நீர். தன்னுல், தன் பரிசனத்தால், பகைவரால், விலங்குகளால் கள்வரால் வரும் ஐந்து பயங்களையும் போக்கி அரசு புரிகின்றவன்தான் மன்னன். தாங்கள் உத்தம குணம் படைத்த உயர்ந்த நீதி நெறிச் செம்மல். அடியவள் தங்கள் அலுவலகத்தில் பணிபுரியும் ஒரு ஏழையின் மனைவி. பெண்கள் கற்பினுல் தான் மழை பொழிகின்றது.

''கற்பினில்நின்றது காலமாரியே''

என்கின்ருர் கம்பர்.

''மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னுல்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனே?

என்கின்ருர் சேக்கிழார் பெருமான். இந்தக் கடிதத்தைப் பாரும். தங்கள் ஆட்சியில் என்னைப் போன்ற கற்புடைய பெண்கள் எப்படி வாழ முடியும் ? இதைப் பார்த்து தங்கள் செங்கோலையும் என்னையும் என் கணவரையும் என் கற்பு நிலையையுங் காத்தருளும்'' என்று கூறிக் கண்ணீர் சொரிந்தாள்.

அக்கடிதத்தைக் கண்ணுற்ற காவலன் கண்கள் சிவந்தன. கோபத் தீ மூண்டெழுந்தது. திவாகரன் பரம யோக்கியனைப்போல் நடந்தானே ? துஷ்டன். இப்படியும் ஆற்றங்கரையில் நடந்து கொண்டானு ? உடனே அவனை அழைத்துத் தண்டிக்கின்றேன்'' என்று காலாக்கினி உருத்திரரைப்போல் கொதித்து எழுந்தான்.

''சேவகனே? மந்திரி திவாகரனை இங்கு அழைத்து வா'' என்ருன்.

அரசரே ! தாங்கள் கருணை கூர்ந்து என் வீட்டுக்கு எழுந்தருளுங்கள். மந்திரி அங்கேயிருக்கின்ருர்'' என்ருள் பூங்கொடி.

# சிந்தையுள் நீங்கா ஒருவன்

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

இது திருப்புகலூர். ஞானம் உண்ட திருவாயராகிய ஞான சம்பந்தப் பிள்ளையார் இங்கே எழுந்தருளியிருக்கிறார். ஆண்டவனுடைய திருக்கோலத்தைக் காணுந்தோறும் அவருக்கு எத்தனையோ எண்ணங்கள் சுழல் சுழலாக நெஞ்சில் தோன்றுகின்றன. மற்றவர்கள் விக்கிரக விஷயத்தில் இறைவனைக் கண்டு கைகூப்பி வணங்கி வழிபடுகிறார்கள். இறைவனுடைய இயல்புகள் எல்லாவற்றையும் நன்குணர்ந்தவர் சம்பந்தப் பிள்ளையார். ஆண்டவனுடைய வடிவத்தைக் கண்டவுடன் அவருடைய நெஞ்சில் இறைவனோடு தொடர்புடைய பல காட்சிகள் எழுகின்றன. புறத்தே காணும் காட்சி அகத்தே விரிவாகக் காணும் காட்சிக்குத் தூண்டுகோலாக உதவுகிறது. தலத்திலுள்ள பல வகைக் காட்சிகளைக் காணும்போதே இறைவனுடைய திருக்கோலமும் அவனுடைய பெருங்கருணையும் உள்ளத்தில் தொடர்ந்து தோன்றுகின்றன. அவருடைய திருப்பாடல்களில் இப்படி அமைந்த இரண்டுவகைக் காட்சிகளையும் ஒருங்கே காணலாம். அவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களைப் படித்துப் பொருள் செய்து பிறகு அந்தப் பதிகங்களுக்குரிய தலங்களுக்குச் சென்று பார்த்தால், பாடல்களில் காணும் பொருள் அனைத்தும் அந்த இடங்களில் காணல் இயலாது. மன எழுச்சி

---

உடனே அரசன் ராணுவ அதிகாரியுடன் பூங்கொடியை அழைத்துக்கொண்டு சென்றான். கதவு திறந்து உட்புகுந்தான். பூங்கொடி படுக்கை அறையைத் திறந்தாள். மந்திரி பொறிக்குள் அகப்பட்ட பெருச்சாளியைப்போல் அங்கு இருந்தான். ராணுவ அதிகாரி மந்திரி கையில் விலங்கு பூட்டினான். மந்திரி சிறைச்சாலைக்குச் சென்றான்.

"அம்மா! நீ கவலைப்படாதே! உன்னையும் உன் கணவனையும் காத்தருள் புரிவேன்" என்று கூறிவிட்டு, அரசன் அரண்மனை சென்றான்.

அரசன் அமைச்சனை விசாரித்துக் கடுங்காவல் தண்டனை விதித்தான்.

அயலூர் சென்றிருந்த பூங்கொடியின் கணவன் ஊர்வந்து சேர்ந்தான். நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் பூங்கொடி தன் கணவனிடம் கூறியழுதாள். மனைவியின் மதிமிகுந்த செயலைக் கேட்டு அவன் மகிழ்ச்சியடைந்தான். அவளைத் தேற்றினான். அன்றுமுதல் அவள் ஆற்றுக்குப் போவதை மறந்தாள்.

அரசன் பூங்கொடியின் கணவனுக்கு உயர்ந்த பதவியைக் கொடுத்தான். அரசனுடைய அருட்பார்வை பூங்கொடிமீது பட்டது. பூங்கொடி தன் கணவனுடன் இனிது வாழ்ந்தாள்.

காரணமாக உள்ளுணர்வு உந்தச் சம்பந்தர் கண்ட அகக் காட்சியை நாமும் காணுவது என்பது எளிய செயலா? எங்கே போனாலும் கண்ணிலே காணும் காட்சிகள் அவருடைய உணர்வைத் தூண்டவும் இறைவனுடைய கருணை விரிவை எண்ணவும் கருவியாக நிற்கும். இந்த உண்மையை உணர்ந்தால்தான் பாட்டிலுள்ள பொருளுக்கும் தலத்திலுள்ள அமைப்புக்கும் உள்ள வேறுபாட்டுக் குரிய காரணத்தை அறிந்துகொள்ள முடியும்.

திருப்புகலூரில் சம்பந்தப் பெருமான் இறைவனைத் தொழுது திருப்பதிகம் பாடுகிறார். அதில் ஒரு பாட்டில் இந்த இருவகைக் காட்சிகளையும் அழைத்துக் காட்டுகிறார்.

* * *

இறைவன் பாடுகிறான். இனிய பண்ணாகப் பாடுகிறான். வேதமே அவனுடைய திருவாக்கில் உயிரைக் குளிரவைக்கும் பாடலாக எழுகிறது; அநாதியும் அனந்தனுமாகிய எம்பெருமான் இடைவிடாது பாடிக் கொண்டிருத்தலால் மறையும் அநாதியாக அனந்தமாக நிற்கிறது. மக்களுக்கு விதியையும் விலக்கையும் காட்டி உண்மையை உணர்த்தி அனுபூதி பெறச் செய்யும் பாங்குடையது மறை. அது இறைவனுடைய திருவாக்கு. உலகமும் தத்துவங்களும் அழிந்தொழிந்தாலும் வேதம் அழியக் கூடாது என்று சாவாமூவாப் பேராளனாகிய அவன் அதைப் பாடிக் கொண்டே இருக்கிறான். சம்பந்தருடைய அகக் காட்சியிலே இறைவன் மறைபாடும் இன்னோசை கேட்கிறது.

''பண் நிலாவும் மறை பாடலினான்''

எம்பெருமான் அருளே வடிவாகிய எம்பெருமாட்டியை ஒரு பாகத்தில் வைத்திருக்கிறான். அந்த அருட்பிராட்டியின் ஆற்றலால் உலகமெல்லாம் இயங்கி வருகின்றது. பிராட்டி என்றும் மங்கலமுடையவள். நித்திய சுமங்கலையாகிய அவளுக்கு என்றும் உலகத்தோடு தொடர்புடைய படைப்பு ஆகிய காரியங்களைச் செய்வதே தொழில். தன்னுடைய ஆற்றலின் சிலசில பகுதிகளைப் பிரமன் முதலிய தேவர்களிடத்திலே பொருத்தி, அத்தகைய தொழில்களை நடத்துகிறவள். மறைபாடும் பெருமானுக்கு உடனிருந்து கைதட்டித் தாளம்போடும் பெருமாட்டி அவள். அவளுடைய மங்கலத்துக்கு அணிகலனாக விளங்கும் கைவளையல்கள் தாளம் போடும்போது 'கல் கல்' என்று ஒலிக்கின்றன. பாடும் பெருமானுக்கு ஏற்ற வகையில் தாளம் கொட்டும் பிராட்டியாக அவள் விளங்குகிறாள். அவன் ஆடினாலும் தாளம் போடுவாள்; பாடினாலும் கைதட்டித் தாளம் போடுவாள். இறைவனுடைய வேதப்பாட்டைக் கேட்கும்போது 'கல் கல்' என்ற வளைக்கைத் தாள ஒலியும் அகக்காட்சியில் எழுகிறது. அந்த ஒலி எங்கிருந்து வருகிறது என்று பார்க்கும்போது முன்

கையிலே வளைகளை அணிந்த அம்பிகை காட்சியளிக்கிருள். அவள் எப்போதும் தன்பால் நிலாவ எழுந்தருளியிருக்கிருன், வேதம் பாடும் வித்தகனுகிய இறைவன்.

கணவன் செய்யும் அறங்களுக்கு ஒத்து இணங்கித் துணை செய்பவள் மனைவி என்பது இந்த நாட்டு மரபு. ஆடவன் செய்யும் செயல்களுக்கெல்லாம் தாளம் போடுகிறவள் உண்மை மனைவி. நித்திய தம்பதிகளாகிய இறைவனும் இறைவியும் இந்த அறத்தை நடத்திக் காட்டுகிருர்கள். அவன் பாடுகிருன்; அந்தப் பாடலுக் கேற்றபடி தாளம் போடுகிருள் அம்மை. இருவரும் ஒத்து அருள் பாலிப்பதனுல் உலகம் நிகழ்ந்து வருகிறது. இந்தத் தம்பதியை அகக் காட்சியிலே காணும் சம்பந்தப் பெருமான் பாடுகிருர்.

> பண்ணிலாவும் மறை பாடலினன்;
> இறை சேரும் வளையங்கைப்
> பெண்ணிலாவ உடையான்.

இவ்வாறு அம்மையோடு எழுந்தருளியிருக்கும் அப்பனை வந்து தொழுகிருர்கள் பக்தர்கள். அவர்கள் கண்காண வடிவு கொண்டு உமையொரு பாகனுக எழுந்தருளியிருப்பதனுல் அவனை நாடி வருகிருர்கள் அன்பர்கள். பணத்தாலும் உடல் வலிமையினுலும் கல்வியினுலும் சிறந்தவர்களைப் பெரியவர்கள் என்று உலகம் மதிக்கிறது. ஆனுல் இறைவனை வழிபட்டு வணங்கும் பண்பாளர் யாரோ அவர்களே உண்மையில் பெரியவர்கள். "பணியுமாம் என்றும் பெருமை" என்பர் திருவள்ளுவர். யாவரிடத்திலும் பணிவாக நடக்கும் மக்களைப் பெருமை யுடையார் என்று அவர் கூறுகிருர். எல்லாருக்கும் பெரியானுகிய ஆண்டவன் ஒருவனே தலைவன் என்று தெரிந்து அவன் திருவடியைத் தொழும் பணிவுடையவர்கள் மிக மிகப் பெரியவர்கள். அவர்கள் நாள்தோறும் தவருமல் வந்து இறைவனைத் தொழுகிருர்கள்; வாயாரப் புகழ்பாடி ஏத்துகிருர்கள்.

மனிதர்கள் கருவி கரணங்களுடன் உலகில் வாழ்கிருர்கள். மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களாலும் தொழில் செய்கிருர்கள். அந்த மூன்றும் எப்படி எப்படி இயங்குகின்றனவோ அதற்கேற்பப் புண்ணிய பாவங்களும் அவற்றின் விளைவாகிய இன்ப துன்பங்களும் உண்டாகும். மூன்று கரணங்களாலும் இறைவனை வழிபட்டு வாழ்கின்ற பெரியவர்கள் அவனுடைய அருளைப் பெற்று யாரும் பெருத பேரின்ப வாழ்வை அடைவார்கள்: அப்பாலுக்கும் அப்பாலாய், நுட்பத்தில் நுட்பமாய் இருக்கும் எம்பெருமான் அடியவர்கள் கையினுல் தொழவும் வாயினுல் வழுத்தவும் மனத்தினுல் தியானிக்கவும் ஏற்றபடி 'வெண்ணிலாவும்' திருவுருவத்துடன் எழுந்தருளியிருக்கிருன். இந்த அருட் செயலை உணர்ந்த பெரியவர்கள், அவன் கழலை என்றும் தொழுது ஏத்துகிருர்கள்.

"பெரியார் கழல் என்றும் தொழுது ஏத்த."

இறைவனைத் தொழுது வணங்குதல் உடலின் செயல். ஏத்துதல் வாக்கின் செயல். அடுத்தது உள்ளத்தின் செயலாகிய தியானம். உடம்பாலே வணங்கும் செயல் எளிது. விலங்கினங்களும் பழக்கத்தினால் வணங்குவது உண்டு. ஆனால் அவை வாயில்லாப் பிராணிகளாதலின் ஏத்த முடியாது. மனிதர்களில் கூடப் பலர் இறைவனைப் பலபடியாக ஏத்துவதற்கு ஆற்றல் இல்லாதவர்களாக இருக்கிறார்கள். உலகத்துப் பொருள்களைப் பற்றிய செய்திகளை நிரம்பத் தெரிந்துகொண்டு நாட் கணக்காக அவற்றைப் பற்றி அவர்களால் பேச முடியும். இறைவனைப் பற்றிப் பேசவேண்டுமானால் அவனைப் பற்றிய நூல்களைப் படித்தும் அவனுடைய அன்பர்களுடன் உறவாடியும் அவனைப் பற்றிய செய்திகளைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆகவே, உடம்பால் தொழுவதைவிட வாயால் ஏத்துவது அரிய காரியம்; சிறந்த செயல். பெரியவர்கள் இறைவனுடைய புகழையும் திருநாமங்களையும் பல வகையில் தெரிந்து கொண்டு, அவற்றைப் பயன்படுத்தி அவனை ஏத்துகிறார்கள். வணங்குவது முதல்படி, ஏத்துவது அடுத்தபடி. இவ்வாறு உடம்பும் வாக்கும் இறைவனுடைய வழிபாட்டில் ஈடுபடுகின்றன.

காயமும் வாக்கும் எதில் அதிகமாக ஈடுபடுகின்றனவோ அதுபற்றிய எண்ணம் உள்ளத்தே மனிதனுக்கு உண்டாகும். அந்த இரண்டு செயல்களையும் ஆர்வத்தோடு செய்தால் அதனால் விளைகின்ற எண்ணம் உள்ளத்தே பதியும். அடிக்கடி கண்ணிலே கண்டவரை உள்ளம் நினைத்தலும் காணாதவரை நினையாமல் ஒழிவதும் மனித இயல்பு. இறைவனையே தரிசித்து வணங்கி அவனுடைய புகழையே பேசும் பெரியவர்களுக்கு இறைவனுடைய திருவுருவம் உள்ளத்தில் தியானப் பொருளாக அமைகிறது. புறக் கரணங்கள் இறைவன் வழிபாட்டில் ஈடுபடப்பட அதனால் உண்டான உணர்ச்சி உள்ளத்தே பதிகிறது. புறக்காட்சி அகக் காட்சியாகி அது பின்னும் விரிகிறது. எம் பெருமானைப் புறத்திலே தரிசித்து அன்பு செய்தவர்களுக்கு உள்ளத்திலே அந்தப் பெருமானின் வடிவம் மெல்ல மெல்லப் புகுகிறது. புறப் பயிற்சியில் வலிமை ஏற ஏற அகக்காட்சி அழுத்தமாகப் பதிகிறது. அப்போது அவர்கள் பெறுகின்ற இன்பம் பன்மடங்காகிறது. இறைவனுடைய திருவருளால் அவர்களுடைய மனம் ஒருமைப்பட்டு இறைவனை இடைவிடாமல் நினைக்கும் ஆற்றலைப் பெறுகிறது. இந்த மூன்றாவது நிலைதான் இறைவனை வழிபடுவதற்குரிய பயன். கழலைத் தொழுது ஏத்தி ஏத்தி அந்தப் பழக்கம் முறுக முறுக, இறைவன் உள்ளே நிலாவுவான்; பின்பு நீங்காமல் இருப்பான். திருவுருவை வழிபடுவதும் திருநாமத்தைச் சொல்லி இறைவன் அருட்புகழை

ஏத்துவதும் இந்த அகமுகக் காட்சிக்கு உதவுவன. புறத்திலே காணமல் அகத்திலே ஒன்றை நினைக்க இயலாது. ஆகவே திருக்கோயிலைத் தரிசித்து வழிபடுவதும் திருவுருவத்தைத் தொழுது ஏத்துவதும் உள்ளமாகிய கோயிலில் அவன் எழுந்தருளும்படி செய்வதற்கான பயிற்சிகள். திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் அன்பிஞல் பெரியார்கள் வந்து தன் கழலை நாள்தோறும் தொழுது ஏத்த அந்தப் பயிற்சியின் மிகுதியிஞல் அவர்களுடைய உள்ளத்துக்குள்ளே புக்கு என்றும் நீங்காமல் இருக்கிருன்,

பெரியார் கழல் என்றும் தொழுதேத்த
உள்நிலாவி அவர் சிந்தையுள் நீங்கா ஒருவன் இடமென்பர்.

இனி அவர் கண்ட புகலூரின் காட்சி வருகிறது. அங்கே பல அடியார்கள் பரம்பரை பரம்பரையாக வாழ்கிருர்கள். குடித்தனப் பாங்கு நிறைந்து நல்ல குடிகளாகத் தத்தமக்கு ஏற்ற கடமைகளைச் செய்து நிலவுகிருர்கள். குடிமைத் தொழிலில் சிறந்து நிற்கிருர்கள். அவர்களுடைய குடும்பங்கள் இறைவனுடைய திருவருளால் மேலும் மேலும் மல்குகின்றன. இறைவனுடைய அடியார்களாக இருப்பவர்கள் எல்லாவற்றையும் உதறிவிட்டு ஓடிவிட மாட்டார்கள். சிறந்த குடிமக்களாக விளங்கி, அவன் அருளே துணையாகக் கொண்டு, கடமைகளைச் செய்து வாழ்வார்கள். அத்தகைய பண்பைத் திருப்புகலூர் அடியார்களிடத்திலும் காண்கிருேம்.

மண்நிலாவும் அடியார் குடிமைத்தொழில் மல்கும் புகலூரே.

திருப்புகலூரில் உள்ள அடியவர்கள் குடிமைத் தொழிலில் சிறந்து நிற்கிருர்கள். இங்கேதான் மறைபாடும் எம்பெருமானும் அவனுடன் நிலவும் எம்பெருமாட்டியும் எழுந்தருளியிருக்கிருர்கள். இறைவனுடைய கழலைப் பல பெரியார்கள் என்றும் தொழுது ஏத்துகிருர்கள். அதன் பயனுக அவர்களுடைய உள்ளத்தில் இறைவன் புகுந்து எப்போதும் நீங்காமல் இருக்கிருன்.

இந்த எண்ணங்களைப் பாசுர வடிவாக்கி அருளுகிருர் சம்பந்தர்.

பண்நி லாவும்மறை பாடலி ஞன்இறைசேரும் வளையங்கைப்
பெண்ணி லாவஉடை யான்பெரி யார்கழல் என்றும் தொழுதேத்த
உள்நி லாவிஅவர் சிந்தையுள் நீங்கா ஒருவன் இடமென்பர்
மண்ணி லாவுமடி யார்குடி மைத்தொழில் மல்கும் புகலூரே.

[பண்-வேதத்துக்குரிய சுரம்; இறை-முன்கை; மண்-உலகம்; மல்கும்-நிறையும்; உடையான் ஒருவன் இடம் புகலூர் இடம் என்பர் என்று முடிக்க.]

இது, முதல் திருமுறையில் இரண்டாம் பதிகத்தில் மூன்ரும் பாட்டு.

உ
முருகா



## சாந்தி பருவம்

### ஆபத் தருமம்

*(168-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

### குருவியும் பிரமதத்தனும்

தருமர் ''பிதாமகரே! மந்திராலோசனையைக் கூறினீர். பகைவனிடம் நம்பிக்கை வைக்கக் கூடாது. எல்லாவிடத்திலும் நம்பிக்கையில்லா திருப்பாளுகில் அரசன் எவ்விதம் இருக்கமுடியும்? அரசனுக்கு நம்பிக்கையால் அச்சம் ஏற்படுகின்றது. இனி எனக்கு விவரமாகக் கூறியருளும்'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''வேந்தனே! பிரமதத்தனுக்கும் பூஜனி என்ற ஒரு குருவிக்கும் நடந்த உரையாடலைக் கூறுகின்றேன் கேள்.

காம்பில்ல தேயத்தில் பிரமதத்தன் என்ற அரசன் வாழ்ந்தான். அவனுடைய அரண்மனையில் பூஜனி என்ற சிட்டுக்குருவி நெடுங் காலம் வசித்துக் கொண்டிருந்தது. அது எல்லா உயிர்வகைகளின் மொழிகளை அறியும் ஆற்றலும், அறநெறிகள் அனைத்தும் அறியும் மதி நலமும் பெற்றிருந்தது. ஒளிமிகுந்த ஒரு குஞ்சு அதனிடம் பிறந்தது.

அதே சமயத்தில் அரசனுக்குஅவன் மனைவியிடம் ஒருபுதல்வன் பிறந்தான். நன்றியறிவுள்ள பூஜனி கடற்கரையிற் சென்று வலிமை தரத்தக்கதும் அமுதம் போன்ற இனிமையானதும் ஆகிய இருகனிகளைக் கொணர்ந்து தினந்தோறும், தன் குஞ்சுக்கும் அரச குமாரனுக்குங் கொடுத்து வந்தது. அக்கனியின் மகிமையால் அரச குமாரன் நல்ல வளர்ச்சியடைந்தான்.

அரசகுமாரன் பறவையின் குஞ்சுடன் கொஞ்சி விளையாடுவான். பறவையின் குஞ்சும் இனிது வளர்ச்சியுற்றது. ஒருநாள் இளம் பருவத்தின் அறியாமையால் அரசகுமாரன் குருவிக் குஞ்சைக் கொன்று விட்டான்;

வழக்கம் போல் பூஜனி இரண்டு கனிகளைக் கொணர்ந்தது. இறந்து கிடந்த தன் குஞ்சைக்கண்டது. மன்னவன் மகன்தான் கொன்று விட்டான் என அறிந்தது. ஆற்றொணாத துயரம் அடைந்தது. ''மகனே! மகனே!'' என்று அலறி அழுதது. கண்ணீர் பெருகி, உள்ளம் உருகி, உணர்வு குன்றிச் சோர்ந்தது.

"ஆ! மகனே! உன்னையிழந்து நான் எங்ஙனம் வாழ்வேன்? அரச னிடத்தில் நட்பு கிடையாது. அன்பு கிடையாது; நல்ல எண்ணங் கிடையாது. பயன் கருதி நன்மொழி நவில்வார்கள். காரியம் முடிந்த பின் தள்ளிவிடுவார்கள். அனைவர்களுக்கும் அபகாரத் தைச் செய்யும் அரசர்களிடம் நம்பிக்கை வைக்கக்கூடாது. தீமை செய்துவிட்டு இன்னுரை கூறுவார்கள். நன்றிகொன்றவனும், மித்திரத் துரோகியுமான இந்த மன்னன் மகனுக்கு இப்போது தக்க தண்டனையைத் தருகின்றேன். உடன் பிறந்து வளர்ந்த வனும், உடனிருந்து உண்டவனுமான என் குழந்தையைக் கொன்ற இவனுக்குத் தண்டனை அவசியமானது" என்று கூறி மன்னன் மக னுடைய இரு கண்களையும் தன் காலினால் பெயர்த்தது.

பூஜனி விண்ணில் நின்று "இந்த உலகில் வேண்டும் என்றே செய்த வினை உடனேயே செய்தவனிடம் வரும்" என்று சொல்லிற்று.

அரசன் இவற்றையெல்லாம் அறிந்தான். குருவியைப் பார்த் துக் கூறுகின்றான். "பூஜனீ! என் மகன் பெரும் பிழை செய்தான். செய்ததற்குப் பயனாக இரு கண்களையும் இழந்தான். அவன் செய்த குற்றத்துக்கு ஏற்ற தண்டனை உன்னால் தரப்பட்டது. அந்த இரண்டும் சமமாகி விட்டன. ஆதலால் நீ போக வேண்டாம். இரு" என்றான்.

சிட்டுக் குருவி "அரசே! ஒரு முறை குற்றஞ் செய்தவன் குற்றஞ் செய்த இடத்திலேயே நம்பிக்கையுடன் தங்குவது அறி வுடைமையாகாது. வெளிப்படையாகப் பகையுள்ள இடத்தில் நன்மொழி கூறப்பட்டாலும் நம்பிக்கை வைக்கக் கூடாது. விலகி விடுவதுதான் நலம். அவ்விடத்தில் நம்பிக்கை வைத்த மூடன் விரைவில் கொல்லப்படுவான். பகைமை எளிதில் தணிவதில்லை. பகைமையுணர்ச்சியால் மக்களும் பேரர்களும் அழிவார்கள். பகைமையுணர்ச்சியுடையவர் ஒருவரையொருவர் நம்புதல்கூடாது. நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கை கூடாது. நம்பிக்கையுள்ள வனிடத்திலும் மிகுந்த நம்பிக்கை கூடாது. நம்பிக்கையால் உண் டாகும் பயமானது வேரையும் அறுக்கும். உறவினரில் தாய் தந்தையர் சிறந்தவர்கள். மனைவி வயல் போன்றவள்; மகன் விதை போன்றவன்; உடன் பிறந்தவன் பகைவனாவான். மனிதன் சாப் பிட்ட கையில் ஈரம் உள்ளவரை நண்பனாயிருப்பான். தனக்கு நேரும் நன்மை தீமைகளைத்தான் நுகர வேண்டுமேயன்றி பிறர் நுகரமாட் டார்கள். நான் உன் வீட்டில் நெடுங்காலம் அச்சம் இன்றி வாழ்ந் தேன். இனி வாழ்வது நல்லதன்று. நான்விடை பெறுகின்றேன்." என்று கூறியது.

[தொடரும்]

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

**கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா**

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்

போன் : 83839

திருப்புகழமிர்தம் Regd. No. M. 3487

Registered with the Registrar of Newspapers for India under R N. 1109/57



Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodana Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Tiruvappa Mudali Street, Triplicane, Madras-5.